



உ

கணபதிதுணை

திருச்சிற்றம்பலம்

# சைவசாஸ்திர பரிபாலனம்

| தொகுதி உ | விக்கிரமஞு பங்குனிமீ 1941 மார்ச்சு | பகுதி எ |
| --- | --- | --- |

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே.

## பிக்ஷாடனர்

(முற்றொடர்.)

சிவபெருமானுக்கு இறுதியில்லை என்பதை உணராத முனிவர்கள் கோபம் பிடித்துத் தள்ள, பின்னும் அபிசாரஹோமம் செய்தார்கள். அவ் வக்கினியினின்று தோன்றிய அபஸ்மாரம் எனப்படும் முயலகனையும், யாகாக்கினியையும் நோக்கி, "நம் வலிமை கெடும்வண்ணஞ் செய்த சிவனைக் கொல்லுதிர்" என்று சொல்லி ஏவினார்கள். சிவபெருமான் யாகாக்கினியை ஒரு திருக்கரத்தில் ஏந்தி, முயலகனைத் திருவடியால் வீழத்தள்ளி, அத் திருவடியை அருளினால் அதன் முதுகில் ஊன்றிக்கொண்டு, தேவர்கள் துதிக்க நின்றார். இருஷிகள் அவர் நிற்றலை அக்கினி காலப் பார்த்துச் "சிவன் அழிக" என்று எண்ணில்லாத சாபங்களைச் சொன்னார்கள். அச் சாபங்கள் பலியாது போயின.

முனிவர்கள் தாம் அநுசரித்துவந்த மீமாஞ்சைமதம் அநுபவத்தாலே பொய்க்கப்பட்டமையைச் சிந்தித்து, தங்கள் மந்தி

ரக் கிரியைகளெல்லாம் விபரீதபாவனையால் வியர்த்தமாயின என்று அவற்றை விட்டுச் சினம் நீங்கி, வலி குறைந்து, ஒரு செயலுமின்றி, வாட்டமும் வெட்கமு முடையவர்களாய் நடுங்கி, தொலையாத பாவமும் பழியும் பூண்டு, பூமிக்குப் பாரமாய் வாளா நின்றார்கள்.

அழிவில்லாத சிவபெருமானை அழிக்கும்படி அபிசார ஹோமஞ் செய்து, அதிலிருந்து பலவற்றையும் எழுப்பி விடுத்துச் சாபத்தையும் கூறினர். அவற்றினால் அக் கடவுளை அழிக்க முடியுமோ? அவற்றால் தங்கள் வலிமையும் இழந்தார்கள். சிவபெருமான் அழிவில்லாதவர் என்பதுபற்றியே "ஈறிலாதவன் ஈசன் ஒருவனே" எனத் திராவிடசுருதி கூறிற்று. சரபோபநிடதமும் "யோந்தகாலே ஸர்வ லோகாந் ஸம்ஜஹார" முடிவு காலத்திலே சர்வலோகங்களையும் ஒடுக்குகிறவராய் எவர் இருக்கின்றாரோ எனச் சிவபெருமானுக்கு நமஸ்காரம் கூறியதும் காண்க.

பின்பு அவர்களது சித்தவிருத்தியையும் பரிபாகத் தோற்றத்தையும் அறிந்த சிவபிரானார் அவர்களுடைய ஆணவமலரூபமாகிய முயலகன்மீதே நின்று அநவரததாண்டவம் செய்தல்போல நடித்தருளினார். நடனங் கண்ட முனிவர்கள் மிகப் பயந்து நடுங்கி வீழ்ந்தார்கள். சிவபெருமான் தம்மை மதியாத முனிவர்களுக்கு ஞானத்தைக் கொடுத்தருளினார். அவர்கள் திருவருளால் எழுந்து, "எம் பெருமானே! அடியேம் செய்த குற்றங்கள் எல்லாவற்றையும் பொறுத்தருள்புரிக" என்று விழ்ந்து வணங்கி, எழுந்து கைகளைச் சிரசின்மீது கூப்பி நின்றார்கள். சிவபெருமான் அவர்களை நோக்கி, "நீங்கள் இதுநாள் வரையும் கடவுளாகிய நம்மை உணராது மயங்கி, அசுத்த வைதிகமாகிய துன்மார்க்கத்தைப் பற்றி அதிமோகராயினீர்கள்; ஆதலால், நீங்கள் செய்த தவமும், உம் மனைவியர் கொண்ட கற்பும் பிரயோசனமற்றவை யாயின. உங்கள் மோகத்தை நீக்கினும். இனி, நீங்கள் எமது கட்டளைப்படி, சுத்த வைதிக சைவ மார்க்கத்திலே நின்று, வேதாகமவழியில் ஒழுகிப் பாவங்களை நீக்கித் தவஞ் செய்து, போகமோக்ஷங்களை அடையுங்கள்" என்று கூறி, அவர்களை அங்கே நிறுத்தி, திருமால் முதலிய

தேவர்களை அவரவர் இடங்களுக்குச் செல்லும்படி விடை கொடுத்துத் தாம் உமாதேவி சமேதராய் வீற்றிருந்தருளினார்.

கந்தபுராணத்துத் ததீசியுத்தரப் படலம் ௩௦-ம் செய்யுள் முதல் ௧௨௭-ம் செய்யுள் வரையும், கோயிற்புராணத்துப் பதஞ்சலிச்சருக்கத்திலும் இச் சரித்திரம் பரக்கக் கூறப்பட்டுள்ளது.

சிவபெருமான் பிக்ஷையேற்றருளியமையை,

சூடல்வெண் பிறையினர் சுடர்முடியர்
சுண்ணவெண் ணீற்றினர் சுடர்மழுவாள்
பாடல்வெண் டிசைமுரல் கொன்றையந்தார்
பாம்பொடு நூலவை யசைந்திலங்கக்
கோடனன் முகிழ்விரல் கூப்பிநல்லார்
குறையுறு பலியெதிர் கொணர்ந்துபெய்ய
வாடல்வெண் டலைபிடித் திவராணீர்
வாய்மூ ரடிகள் வருவாரே.

என வரூஉம் திருஞானசம்பந்தமூர்த்திகள் தேவாரத்தான் உணரப்படும்.

பரமேசுரன் புலித்தோலாதியவற்றை யுடையவர் என்பது, கீழ் வரும் தேவாரங்களால் அறியலாம்.

"புலியத ளுடையினர்" (திருஞா, மறைக்காடு)
"புலியதளே யுடையாகத் திரிவான் றன்னை" (திருநா, முதுகுன்றம்)
"பரசு பாணியர்" (திருஞா, பல்லவனீச்சுரம்)
"மான்மறி தங்கையின் மருவக் கண்டேன்" (திருநா, திருவாய்மூர்)
"முண்டந் தரித்தீர்" (சுந்தரர், திருப்பரங்குன்றம்)
"குறட்பூதச் செல்வன்" (திருஞா, கீழைத்திருக்காட்டுப்பள்ளி)
"முறித்ததொரு தோலுடுத்து முண்டஞ் சாத்தி" (திருநா, வலம்புரம்)
"தருக்கழிய முயலகன்மேற் றாள்வைத்தானை" (திருநா, கஞ்சனூர்)
"மூசு மிளநாக முடனாகக் கொண்டார்"
"மழுவலங் கைகொண்டார்"
"துடி கொண்டார்" (திருநா, தனித்திருத்தாண்டகம்)
"அழலின் வலனங்கை யதுவேந்தி யனலாடும்" (திருநா, நின்றியூர்)

மீமாஞ்சைமதம் புறச்சமயம் ஆறனுள் ஒன்று. மீமாஞ்சை நூல் செய்தவர் சைமினி. இந் நூலில் வேதம் ஒருவராற் செய்யப்பட்டதன்றி நித்தமாய் உள்ளதென்றும், பிரபஞ்சம் நித்தம் என்றும், இட்டி முதலிய சன்மங்கள் செய்யவேண்டுமென்றும், கன்மம் செய்தவனுக்கு அந்த வினையே துறக்க முதலிய பலன்களைக் கொடுக்குமென்றும், பௌதிக சரீரேந்திரியங்களுக்கு வேறாய் ஆன்மாக்கள் உண்டு என்றும், ஆன்மாக்கள் பலர் என்றும், இந்த ஆன்மாக்களுக்கு வேறாய் ஈசுரன் ஒருவன் இல்லை என்றும் கூறப்படும். இதன் விரிவு சிவஞானபோதமாபாடியத்தில் காணப்பெறும். தாருகாவனத்து முனிவரர் மீமாஞ்சை மதக் கொள்கையினரென்பது

"... ... ... ... வேள்வியுந் தவமுந் தாமே
கொடுத்திடு முத்தியென்னுங் கொள்கைசேர் முனிவர்"
(கச்சியப்பசிவாசாரியர்)

எனவும்,

"கருமமே பலத்தை நல்கும் கடவுள்வே றில்லை யென்னு
மருவருஞ் சமயத் தெய்தி மாதவ முனிவர் யாரும்" (கூர்மபுராணம்)

எனவும்,

"மாதவத்துறு முனிவர்நித்தமு மருவுகன்மம தன்றிவே
றேதுமெய்ப்பொரு ளில்லையென்றலும்" (மற்சபுராணம்)

எனவும், பௌராணிகர்கள் கூறுவதனால் உணரப்படும்.

சிவபெருமானார் தாருகாரண்ணியத்திற்குப் பிக்ஷாடன வடிவம் கொண்டு சென்றமைக்குக் காரணம் என்னையெனிற் கூறுதும்:—

கல்வியங்கடற் கரைகண்டவர்களாகிய தேவதாருவனத்து ரிஷிகள் தாமே சுதந்திரர் என மதித்து, சுதந்திரராகிய சிவபெருமானிடத்து அன்புசெய்தலை விடுத்து, மீமாஞ்சைநூலே உண்மைநூல் என மயக்கபுத்திகொண்டு ஒழுகுவதைக் கண்ட பெருங்கருணைத்தடங்கடலாகிய அவ்வீசுரனார், அவர்களைத் தாம் சுத்தராக்கி யருளத் திருவுள்ளங்கொண்டு, ஆன்மாக்கள் பரதந்திரர் என்பதையும், கடவுளுடைய கிருபையாலன்றிப்

புண்ணியம் செய்ய முடியாதென்பதையும் "பரனடிக் கன்பிலா தார் புண்ணியம் பாவமாகும்" எனச் சித்தியாரிற் கூறப்பட்ட வாறு சிவபெருமானைப் புறக்கணித்தவர் பண்ணிய அறமெலாம் பாவமாகும் என்பதையும் அவருக்கும் பிறருக்கும் உணர்த்தி அருளும் பொருட்டு, முன்னர்க் காமத்தையும் பின்னர்க் கோபத்தையும் பயப்பதுபோலத் தோன்றி இறுதியில் ஞானத்தைப் பயப்பதாகிய திருவுருபத்தைக் காட்டுதன் மாத்திரையானே அவர்களுடைய சித்தவிருத்திகள் அப் பாவச்செயல்களிற் பற்றுது விடும்படி வேறுபடுத்தி, அங்ஙனம் வேறுபட்டுக் காமிகளான பின்பு, அவர்களைக் கோபிகளாக்கி, தங்கள் வலியும், தங்கள் அபிசாரவேள்வியின் வலியும் ஆகிய இரண்டையும் நினைத்து, கடவுளாகிய தம்மைக் கோறற்பொருட்டு முயன்றவிடத்து, அவர்களுடைய வலிகள் தம்முன் பலியாமையை அவர்களுக்கு உணர்த்தி, தம்முடைய வலிமையைக் காட்டி, அதுகண்ட அன்னோர் தாங்கள் கொண்ட கருமத்தை விடுத்து, இறைவனுகிய தம் வசப்பட்டு வணங்கியபோது ஞானங்கொடுத்து அருளத் திருவுளங்கொண்டே பிக்ஷாடன மூர்த்தங் கொண்டருளினர். மேலும், சாபமிடுதலிற் சமர்த்தர்களாகிய முனிவர்களை இரட்சித்தல் பரமபதியாகிய சிவபெருமான் ஒருவராலேயே யன்றி மற்றையோரால் முடியாமையும் காண்க.

சிவபெருமான் பிக்ஷாடன மூர்த்தங் கொண்டது மீமாஞ்சை மதத்தைப் பற்றி அதிமோகிகளாயிருந்த இருடிகளைச் சுத்த வைதிக சைவமார்க்கத்தில் நிறுத்தியருளுவதற்காமென்பதை ஸ்ரீ கச்சியப்பசிவாசாரிய சுவாமிகளும்,

ஒழுகிய வேலை தன்னி லுயிர்க்குயி ராகி யுற்றோன்
பழுதினை யகற்றித் தன்னோர் பாங்கரி னுமையாண் மேவ
விழுமிய கயிலை நாப்பண் வீற்றிருந் தருள்வோ னங்க
ளிழுதையர் புரியு நீர்மை யாவையு முணர்ந்தா னன்றே.

என்பதனுல் வெளியாக்கினர்.

சிவபெருமான் தமது திருவுருபத்தை முனிவர்கட்குக் காட்டாது, விஷ்ணுவாகிய மோகினியைக் கொண்டு மயக்குவித்த காரணம் என்னையெனில்; அம் முனிவர்கள் அதிபாதகர்களாதலால் என்பதாம். அவ்வுண்மை, "இழுதையர்" எனவும்,

"... ... முனிவ ராற்றத் தீவினை புரிந்த தீரா
வல்லுறழ் மிடற்றுப் புத்தே ளவர்க்கெலாந் தனதா யுள்ள
தொல்லுரு மறைத்து வேறோர் வடிவொடு தோன்றி நின்றான்"

எனவும், சிவாசாரியசுவாமிகள் புராணத்திற் கூறியவாற்றான் உணரப்படும்.

முதல்வன் முனிபன்னியர்களுக்குத் தமது திருரூபத்தைக் காட்டி, மனம் வேறுபடுத்தி யருளியதென்னையெனில், அவர் தம் கணவர் கட்டளைப்படி நடக்கலன்றித் தம் எண்ணப்படி நடவாமையால் அற்ப பாதகிகள் ஆதலால் என்க.

சிவபெருமான் பிக்ஷை யேற்பார் போன்று சென்று, தமது திருரூபத்தைக் காட்டி, வேதங்களை வீணையிலே படுத்திப் பாடியது, காட்சியாலும் கேள்வியாலும் அவர்களைச் சுத்தராக்கும் பொருட்டேயாகும். முனிபத்தினிமார் அவருக்குப் பிக்ஷையிடுவான் வந்து அவரது பேரழகைக் கண்டு கருப்பவதிகளாயினர். இறைவன் இருடிபத்தினிகளைக் காமித்தது குற்றமாகாதோ எனின், இருடிபத்தினிமார்கள் சிவனைக் காமித்ததேயன்றி, சிவன் சிறிதும் அவர்களைக் காமித்திலர். இருடிபத்தினிகள் தம்மைக் காமித்தபோது சிவபெருமான் அவர்களைப் பேரின்பக் காமிகளாக்கிச் சுத்தராக்கினரன்றி, அவர்களைச் சிற்றின்பக் காமிகளாக்கினாரல்லர். அது,

"இத்திற மாதர் கேளா வீங்கிவர் தம்மைக் கண்டோர்
முத்தரா யுறவ தன்றி முடிவரோ."

என முனிபன்னியர் வாக்கின் வைத்துச் சிவாசாரியசுவாமிகள் கூறியருளியவாற்றான் உணரப்படும். இவ்வுண்மையைச் சிவஞான முனிவரும்,

பன்முனிவர் பன்னியர்கள் பண்டுன்னைக் காமுறவுந்
தன்னியருள் செய்திலையே சோமேசா—வன்னதே
நாங்காதல் கொண்டார் நமக்கெவன் செய்பவோ
தாங்காதல் கொள்ளாக் கடை.

என்பதனால் வெளியாக்கினார்.

முனிவர்கள் விஷத்திரவியங்களை ஆராய்ந்து அவற்றைக் கொண்டு, சிவபெருமானை இலக்காக அபிசாரஹோமத்தைச் செய்து, புலி முதற் பலவற்றை ஏவியும், சாபங்களைச் செப்

பியும், அவற்றுற் பயன் பெறுமையானும், மோகினியுடைய பேரழகைக் கண்டு நியமம் இழந்து கருமங்களை விடுத்தமையானும், தங்கள் மந்திரக் கிரியைகள் எல்லாம் விபரீதபாவனையாய் வீண்பட்டுப் பயன்படாது அநுபவத்திலே பொய்க்கப்பட்டமையானும் தாங்கள் கொண்ட மீமாஞ்சைமதம் பொய்யெனத் தெளிந்து, தாங்கள் சுதந்திரர் அல்லர் என்றும், சுதந்திரர் ஒருவர் உளர் என்றும், அவர் சிவபெருமானே என்றும், அவர் கிருபாசாமர்த்தியத்தாலன்றிப் பாவத்தை விலக்குதலும் புண்ணியம் புரிதலும் முடியாதெனவும் தெரிந்துகொண்டார்கள். சிவபெருமான் அவர்களது சித்தவிருத்தியையும் பரிபாகத் தோற்றத்தையுங் கண்டு நடித்தருளினர். நடனங் கண்ட முனிவர்கள் மெய்ஞ்ஞானம் பெற்றுச் சைவராயினர்கள்.

காமம் வெகுளி மயக்க மிவைமூன்ற
ஞமங் கெடக்கெடு நோய்.

என உத்தரவேதமும் பகர்ந்ததும் இங்கே சிந்திக்கற்பாலதாம் என்க.

ஆகவே, பற்றற்றவராகிய பரமேசுரனைப் பற்றாது இம்முனிவர்கள் செய்துகொண்ட கருமங்களும், இவர் பத்தினிகள் கற்பும் தம்மளவிலே தருமங்கள் போலத் தோன்றி இம்மைப் போகங்கள் சிலவற்றைத் தரினும், பரபோகத்தையும் முத்தியையுந் தராது துன்பத்தையே பயக்குமென்பதும், சிவபெருமான் செய்யும் செயல்களுட் சில புத்திக்குப் பொருத்தமற்றமைபோலத் தோன்றினும் அவைகளின் இறுதிப் பயன் நியாயமாகவே இருத்தலின் அப் பெருமானுடைய செய்கைகள் குற்றமற்றவை யென்பதும், நமது சாத்திரங்களால் மாத்திரமன்று; காந்தம், கூர்மம், மற்சம் முதலிய சிவபுராணங்களாலும் மீமாஞ்சைமதம் கண்டித்தொதுக்கப்பட்டதென்பதும் நாம் உணர்ந்துகொள்ளற்பாலனவாம்.

தியானம்

[illegible]
𑌵𑌾𑌮𑍇 [illegible] 𑌯𑍋𑌃 ।
𑌵𑌿𑌦𑍍𑌰𑌾𑌣𑌂 [illegible] 𑌜𑌟𑌾𑌯𑌾𑌂 𑌶𑌶𑌿𑌯𑌾𑌂 [illegible]
[illegible] 𑌭𑌿𑌕𑍍𑌷𑌾𑌟𑌨𑌂 𑌸𑌂𑌭𑌜𑍇 ॥

# தேவாலய தரிசனம்

சேலம் சிவஸ்ரீ T. N. சுப்பிரமணியக்குருக்கள் அவர்கள்

அநாதிமுத்த சித்துருவாகிய சிவபெருமான் ஒருவரையே பரமபதி என்று துணிந்து, அவர் அருளிச்செய்த வேதாகமங்களிற் கூறிய பிரகாரம் தங்கள் நிலைக்கு ஏற்றவாறு அவரை வழிபடுபவர்களே சைவர் எனப்படுவர்.

சிவபெருமானை அடியவர்கள் வழிபடுந் தானங்கள் மூன்றாம். அவை ஆலயத்துள்ள லிங்கம், சிவனடியார் திருவேடம், ஆன்மா என்பன.

சைவர்கள் தினந்தோறும் ஆசாரத்தோடு வஸ்திரம் இரண்டு தரித்துக்கொண்டு, அநுஷ்டானம் முடித்துத் திருக்கோயிலுக்குப் போகக்கடவர். ஸ்நானம் முதலிய நியமங்கள் இல்லாது திருக்கோயிலுக்குச் செல்லுதல் கூடாது. ஸ்நானத்திற்கு ஆலயத்தருகில் உள்ள புண்ணியதீர்த்தம் விசேஷம்.

ஆலயத்துக்குப் போகும்பொழுது ஒரு பாத்திரத்திலே தேங்காய், பழம், பாக்கு, வெற்றிலை முதலியவை வைத்து அரைக்குக் கீழ்ப்படாது மேலே உயர்த்தப்பட்ட கையில் ஏந்திக்கொண்டு போகவேண்டும். இவைகளுக்குப் பொருள் இல்லாதவர்கள் பத்திரபுஷ்பங்களேனும் கொண்டுபோய்க் கொடுத்து வணங்கவேண்டும். அதுவுங் கூடாதவர் சந்நிதியில் உள்ள செத்தை முதலியவற்றைப் போக்கியேனும் வணங்கவேண்டும்.

திருக்கோயிலைச் சமீபித்தவுடன் தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தை வணங்கி இரண்டு கைகளையும் சிரசிலே குவித்துக்கொண்டு உள்ளே பிரவேசித்துப் பலிபீடத்துக்கு இப்பால் நமஸ்காரம் செய்தல்வேண்டும்.

ஆடவர் அஷ்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்க நமஸ்காரமும் செய்தல்வேண்டும்.

அஷ்டாங்க நமஸ்காரமாவது தலை, செவியிரண்டு, கையிரண்டு, மோவாய், புயங்கள் இரண்டு என்னும் எட்டுறுப்பும்

நிலத்திலே பொருந்தும்படி வணங்குதலாம். பஞ்சாங்க நமஸ்காரமாவது தலை, கைகள் இரண்டு, முழந்தாள் இரண்டு என்னும் ஐந்துறுப்பும் நிலத்திலே பொருந்த வணங்குதலாம். திரயாங்க நமஸ்காரம் ஆடவர், பெண்கள் ஆகிய இருவருக்கும் பொது. திரயாங்க நமஸ்காரமாவது சிரசிலே இரண்டு கைகளையும் குவித்தலாம்.

நமஸ்காரம் மூன்றுதரமாயினும், ஐந்துதரமாயினும், எழுதரமாயினும், ஒன்பதுதரமாயினும் செய்க. ஒருதரம் இருதரம் பணிந்து எழுதல் குற்றம்.

கிழக்கு நோக்கிய சந்நிதியில் பலிபீடத்துக்கு இப்பால் அக்கினிமூலையில் சிரசைவைத்து மார்பு நிலத்திலுற வலக்கையை முன்னும் இடக்கையைப் பின்னும் நேரே நீட்டி, பின் அம்முறையே மடக்கி, வலப்புயமும் இடப்புயமும் பூமியிலே பொருந்த, கைகளை அரையை நோக்க நீட்டி, வலக்கன்னத்தையும் இடக்கன்னத்தையும் தரையைத் தீண்டச் செய்து நமஸ்காரம்பண்ணக்கடவர். தெற்குநோக்கிய சந்நிதியிலும் மேற்கு நோக்கிய சந்நிதியிலும் நிருதிமூலையிற் சிரசை வைத்து முன்போலப் பணியக்கடவர். வடதிசையை நோக்கும் சந்நிதியில் பலிபீடத்துக்கு வாயுமூலையில் சிரசுவைத்து முன்போல நமஸ்கரிக்கக்கடவர்.

இவ்வகையாக வணக்கஞ்செய்து எழுந்து கைகுவித்துக் கொண்டு சிவபெருமானுடைய திருவடிகளைச் சிந்தித்து, கால்களை மென்மெல வைத்துப் பிரதக்ஷிணஞ்செய்க.

கொடிமரநிழலையும் தூபிநிழலையும் கடத்தல் கூடாது. பிரதக்ஷிணம் பண்ணும்பொழுது அந்த நிழலின் மூன்று கூறு நீக்கி, மற்றிரண்டு கூற்றிற் செல்லக்கடவர். திருவிழாவிற் பெருமானுடன் செல்லிற் பாவமில்லை. அபிஷேககாலத்தில் உட்பிரகாரத்தில் பிரதக்ஷிணஞ்செய்தல் கூடாது.

பிரதக்ஷிணஞ் செய்தபின்பு சந்நிதானத்தில் நமஸ்கரித்து, துவாரபாலகரையும் திருநந்திதேவரையும் வணங்கி அநுமதி பெற்று உள்ளே போகக்கடவர். விநாயகருடைய சந்நிதானத்தில் முட்டியாகப் பிடித்த இரண்டு கைகளினாலும் நெற்றியிலே மும்முறை குட்டி வலக்காதை இடக்கையினாலும் இடக்

காதை வலக்கையினாலும் பிடித்துக்கொண்டு மும்முறை தாழ்ந் தெழுந்து நமஸ்காரம்பண்ணுக.

பின்னர் தலையின்மேலனும் இருதயத்தின்மேலனும் கைகளைக் கூப்பிக்கொண்டு சிவலிங்கப்பெருமானுடைய திருமுன்சென்று தியானஞ்செய்து பக்தியோடு ஸ்தோத்திரஞ் செய்யக்கடவர். அங்கே அருச்சகரைக்கொண்டு அருச்சனை செய்வித்து இயன்ற தக்ஷிணை கொடுக்கக்கடவர். பின்பு நடேசர், தக்ஷிணாமூர்த்தி முதலிய மூர்த்திகளையும் அதன்பின் தேவியையும் வணங்கக் கடவர். இறுதியில் விபூதிபெற்றுத் தரித்துக்கொண்டு மும் முறை கைகொட்டித தரிசனபலத்தைத் தரும்படி பிரார்த்திக்க.

அதன்பின் மீண்டும் திருநந்திதேவரை வணங்கிப் பலி பீடத்துக்கு இப்பால் மும்முறை விழுந்து வணங்கி, ஸ்ரீ பஞ் சாக்ஷரத்தை இயன்றளவு ஜபித்து, எழுந்து வீட்டுக்குப் போதல் வேண்டும்.

திருக்கோயிலிலே செய்யத்தகாத குற்றங்கள்: ஆசார மில்லாது போதல், கால் கழுவாது போதல், மரணசௌச ஜன னசௌசத்துடன் போதல், மலசலங் கழித்தல் முதலாயின வாம். இக் குற்றங்களுள் ஒன்றை அறியாது செய்தவர்கள் அக்குற்றம் நீங்கும்படி பிராயச்சித்தஞ் செய்தல்வேண்டும். அக் குற்றங்களை அறிந்தும் கருவத்தினாற் செய்தவர்கள் நரகத்தில் விழுந்து வருந்துவார்கள்.

---

## உபநிஷத் கதை II

[சிவபுரம்: சிவஸ்ரீ சுவாமிநாத சிவாசாரியர் அவர்கள்]

கிருஷ்ண யசுர்வேதத்தில் கடோபநிஷத் என்பது மிகச் சிறந்ததாக விளங்குகின்றது. அதில் யமனையும் நசிகேதஸ் என்ற குழந்தையையும் பற்றிய கதை பரத்துவத்துவத்தை உபதேசிக்கின்றது.

கௌதமர் என்ற மஹா மகிமைவாய்ந்த மகரிஷி ஒருவர் இருந்தார். அவர்,

[illegible]

[illegible]

என்றபடி மிகுந்த அன்னதானச் சிறப்பினால் (வாஜம் - அன்னம் தேன ஜாதம் ச்ரவ: - கீர்த்தி: யஸ்ய ஸ: என்றபடி) வாஜஸ்ரவஸ் என்ற பெயரினால் புகழடைந்தார். அவருக்கு நசிகேதஸ் என்று இளம் வயதுள்ளவனும் பித்ருவத்சலனும் அழகுள்ளவனும் ஒரு புத்திரனிருந்தான். அம் மகரிஷியானவர், ஒருசமயம் சமது வயதுமுதிர்ச்சியை யோசித்தும், தமக்குப் பரலோகத்தில் க்ஷேமத்தைக் கருதியும் விஸ்வஜித் என்ற யாகத்தை நடத்தினார். சமஸ்த ஐசுவரியங்களையும் தக்ஷிணையாகக் கொடுக்கும் அந்த யாகத்தில், தக்ஷிணையின்றிப் பலன் கிடைக்காதென்றும், ஆயினும் பசுக்களைத் தக்ஷிணையாகக் கொடுப்பது மேல் என்றும் உணர்ந்த அந்த மஹரிஷியானவர், வயது முதிர்ந்தவையும், தனக்குச் சமீபத்தில் வரும் ஒவ்வொருவரையும் யமனாக நினைத்து நடுங்குபவையும், உணவு கொள்வதற்கும் திடமற்றவையுமான பசுக்களை ருத்விக்குகளுக்குத் தக்ஷிணையாகக் கொடுக்க ஏற்பாடுசெய்தார்.

அதைக் கண்ட நசிகேதஸ் குழந்தையாயிருந்தபோதிலும் மனதில் இவ்வாறு எண்ணலானான். ஏன் நமது தந்தைக்குக் காரியசித்தியின் முடிவில் பிரயோசனமற்ற செய்கை? இப்படிக் கொடுக்கத் தகாத பசுக்களை தமது ஹிதத்திற்கெனச் செய்யப்பட்ட யாகத்தில் உதவிபுரிந்தவர்களுக்குத் தக்ஷிணையாகக் கொடுக்க இச்சிக்கிறார். இவைகளைத் தக்ஷிணையாகக் கொடுப்பவர்களுக்குப் பலன் தான் ஏது?

பீதோதகா ஜக்தத்ருணா துக்ததோஹா நிரிந்த்ரியா:।
அநந்தா நாம தே லோகா தாந் ஸ கச்சதி தா ததத்॥

என்று மனதில் எண்ணுபவனாய், தகப்பனுக்குப் பிள்ளையும் ஓர் மேன்மையான ஐசுவரியம்; இவர் எல்லாவற்றையும் தக்ஷிணையாகக் கொடுப்பரேல் என்னையும் ஒருவருக்குக் கொடுக்க யோக்கியமுள்ளவராக ஆவார்; அப்பொழுது நானும் ஒருவரிடம் செல்ல நேரும்; அப்படியானால் அதுவும் என்னால் செய்யத் தக்கதே என்று நினைத்து மனதிலுண்டான சிரத்தா விசேஷத்தினால் வசப்படுத்தப்பட்டவன் போலவும், கிரகங்களால் பீடிக்கப்பட்டவன் போலவும், பைத்தியம் பிடித்தவன் போலவும் உடனே தகப்பனின் சமீபத்திற்கு ஓடிவந்து, "தந்தையே!

என்னை யாருக்குக் கொடுக்கப்போகிறீர்கள்?" என்று வினவினான்.

இவ்வாறு கூறின குழந்தையின் வார்த்தையைக் கேட்ட தகப்பனார், அயோக்கியப் பிள்ளை என்று நினைத்துப் பேசாதிருந்தார். அவ்வாறிருந்தபோதிலும் நசிகேதஸ் சிரத்தாபலத்தினால் பரவசனாய், மறுபடியும் "என்னை யாருக்குக் கொடுக்கப் போகிறீர்கள்?" என்று கேட்டான். அதனையும் பாலனின் பிதற்றல் என்று நிராகரித்தார். இப்படி இரண்டு மூன்று தரம் நிராகரித்தும், நசிகேதஸ் "என்னை யாருக்குக் கொடுக்கப்போகிறீர்கள்?" என்று கேட்டான். அப்பொழுது மகரிஷியானவர் பொறுமை என்னும் ஜலத்தினால் அலம்பப்பட்டவராய், முறைப்படி செய்யும் அனுஷ்டானங்களால் மலரஹிதராயிருந்தபோதிலும் உடனே கோபத்தினாற் சூழப்பட்டவராயினார். உலகத்தில் கோபமுள்ளவர்கள் நன்மை தீமைகளையும் செய்யத்தக்கன செய்யத்தகாதனவற்றையும் அறியாதவர்களாய்த் தமக்கே தீங்கிழைத்துக்கொள்ளுகிறார்கள். கோபத்தினாற் குருடான மகரிஷி, தன் உயிருக்குச் சமானமுள்ளவனாய், அபராதமற்றவனாய் இருந்தபோதிலும் கோபாக்கினியாற் கொளுத்துகிறவர் போல் "எமனுக்கு உன்னைக் கொடுக்கிறேன்" என்று கூறினார். இவ் வார்த்தையாகிய வச்சிராயுதத்தால் அடிக்கப்பட்ட நசிகேதஸ் மலைபோல் அசையாதவனாய், கொஞ்சமும் வித்தியாசம் அடையவில்லை. அவன் பின்பு தனியாக ஓரிடத்தில் இருந்துகொண்டு யோசிப்பானாயினான். எனது தந்தை கோபத்தினாற்றான் இவ்வாறு கூறினார்; கோபத்திற்கு விஷயமில்லாதது ஒன்றுமில்லை. இல்லாவிட்டால் பிரியமுள்ளவனாயும் நிரபராதியாயும் உள்ள என்னை ஏன் இப்படிக் கூறுவார்? நடந்த காரியத்தில் யோசிப்பதில் பயனில்லை. இப்பொழுது என்னால் என்ன செய்யத் தகுந்தது என்பதைக் குறித்துத்தான் யோசிக்க வேண்டியது முக்கியம்.

உலகத்தில் பிள்ளை, சிஷ்யன் இவர்கள் உத்தமன், மத்திமன், அதமன் என்று மூவகைப்படுவார்கள். அதில் குருவுடைய இங்கிதத்தை யறிந்துகொண்டு, அவர் உத்தரவின்றியே அவருக்கு இஷ்டமுள்ள காரியத்தில் எவர்கள் பிரவர்த்திக்கிறார்களோ அவர்கள் உத்தமர்கள். எவர்கள் குருவின் இங்கி

த்தை அறிந்தும் உத்தரவை யபேக்ஷிக்கிருர்களோ அவர்கள் மத்திமர்கள். எவர்கள் இங்கிதத்தை அறிந்தும் உத்தரவைக் கேட்டும் அசையாமலிருக்கிருர்களோ அவர்கள் அதமர்கள். நானும் அதமனுக மாட்டேன்; பித்ருவாக்கிய பரிபாலனமே மேன்மை என்று நிச்சயம் செய்துகொண்டு, தனயனின் பிரிவினுல் வருந்தும் தந்தைக்குச் சரியான சமாதானம் கூறிவிட்டு, யமனுடைய பட்டணத்திற்குக் கிளம்பிச் சில நாளில் யமசதனம் போய்ச் சேர்ந்தார். அப்போது யமன் தன் அதிகாரத்திற்கு விரோதமின்றிப் பிரமசதனத்தைக் குறித்துச் சென்றிருந்தார்.

நசிகேதஸ் அங்கு யமராஜன் இல்லை என்பதை மந்திரிகள் மூலம் அறிந்துகொண்டு, தன் காரியசித்தியின் தாமதத்தை நினைத்து, பசி தாகம் இவைகளாற் பீடிக்கப்பட்டவனுயிருந்த போதிலும், உண்ணுவிரதத்தையே அநுஷ்டிப்பவனுய், மூன்று இரவுகள் அங்கு வசித்தான். அதன் பிறகு யமராஜனும் தன் வீட்டிற்கு வந்து, மந்திரிகள் மூலம் அதிதியின் வரவையும் அவன் நடத்தையையும் கேட்டு, இப்படி யோசிக்கலானுர்.

ஆஶாப்ரதீக்ஷே ஸங்கதம் ஸூந்ருதாஞ்ச
இஷ்டாபூர்தே புத்ரபஶூம்ஶ்ச ஸர்வாந்
ஏதத்வ்ருங்க்தே புருஷஸ்யால்பமேதஸ:
யஸ்யாநஶ்நந்வஸதி ப்ராஹ்மணோ க்ருஹே ॥

இம் மகாராஜன் வார்த்தையை மனதில் நினைத்துத் தான் செய்த பிழைக்குப் பிரதீகாரத்தைத் தேடுகிறவனுய், விசுவாசத்தோடு நசிகேதஸ்ஸைப் பார்த்து,

திஸ்ரோ ராத்ரீர்யதவாத்ஸீர்க்ருஹே மே அநஶ்நந்ப்ரஹ்மந்நதிதிர்நமஸ்ய:। நமஸ்தேஸ்து ப்ரஹ்மந்ஸ்வஸ்தி மேஸ்து தஸ்மாத் ப்ரதி த்ரீந்வராந் வ்ருணீஷ்வ ।

என்று இப்படிச் சந்தோஷமுள்ளவரான யமராஜன் மூன்று தினங்கள் தன் வீட்டில் வசித்ததினுல் மூன்று வரங்களைக் கொடுக்குங் காலத்தில் சுத்தமான மனதையுடைய நசிகேதஸ் இதுதான் நல்ல சமயமென்று யோசிக்கலானுன். நான் பிறந்தது முதலாகத் தந்தைக்குப் பிரியமுள்ளவனுயிருந்தும், அவர்

கோபத்தினால் கலக்கத்தை அடைந்து குற்றமற்ற என்னிடம்
இடிபோன்ற கடும்மொழியை மொழிந்தார். பின்பு அவ்வாறு
கூறியதற்கு விசனத்தையும் அடைந்தார். தடுக்க முடியாமை
யினால் யமனுடைய வீட்டிற்கும் செல்ல உத்தரவளித்தார்.
இப்படிச் சாதுஜனங்களால் நிந்திக்கத் தகுந்த காரியத்தினால்
தபிக்கின்ற எனது தந்தை ஆகாரம் நித்திரைகளை விட்டு இது
வரையில் எந்த அவஸ்தையை அடைந்தார் என்பதை யான்
அறியேன். ஆன்மாவை விட்டும் நான் அவருக்குள்ள இந்தக்
கஷ்டத்தை நிவிர்த்திசெய்ய முடியவில்லை; அதிர்ஷ்டமற்ற நான்
என்ன செய்வேன்; கஷ்டம்; தெய்வச்செயலாய் இப்பொழுது
யமனின் அநுக்கிரகம் கிடைத்தது இவரே நமது பிதாவிற்கு
நல்ல மனதை உண்டுபண்ணத் தகுந்தவர். ஆகலின், முதல்
வரத்தினால் எனது தந்தைக்கு நல்ல மனதை யாசிக்கிறேன்.
அப்படிச் செய்தால் எனது பெரிய அபராதமானது கொஞ்சம்
சாந்தமாகும் என்று மனதில் நினைத்துக்கொண்டு, யமனுக்கு
நமஸ்காரம் செய்து,

ஶாந்தஸங்கல்ப: ஸுமநா யதா ஸ்யாத்
வீதமந்யுர்கௌதமோ மாபி ம்ருத்யோ
த்வத்ப்ரஸ்ருஷ்டம் மாபிவதேத்ப்ரதீத:
ஏதத் த்ரயாணாம் ப்ரதமம் வரம் வ்ருணே ॥

ஓ யமராஜனே! எனது தந்தையான கௌதமர் இப்பொழுது
என்னிடத்தில் உண்டான கோபத்தினின்றும் சமாதானமடை
யட்டும். மறுபடியும் உம்மால் என் தகப்பனுடைய சமீபத்
திற்கு அனுப்பப்பட்ட என்னிடத்தில் முன்போல் அன்பினால்
இனிமையாயும் கருணையுடையதாயுமுள்ள பார்வை உண்டாகட்
டும். இதுதான் முதல் வரத்தின் விஷயம் என்றான். இவ்வா
றாக யாசிக்கப்பட்ட யமராஜன் புன்முறுவலோடு அப்படியே
ஆகுக என்று கூறினான்.

மறுபடியும் இரண்டாம் வரம் யாசிக்குங் காலத்தில் ஜரா
மரணம் முதலிய தோஷங்களோடு கூடிய ஐஹிக சுகசாதன
மான ரத்தினம் முதலியவைகளில் விருப்பமற்று, மங்களங்க
ளுக்கு இருப்பிடமாயும், மூப்பு இறப்பு இல்லாததாயும் சுவர்க்க

லோகத்தை அடையும்படி சேர்ப்பிக்கிறதாயும் உள்ள அக்கினி வித்தையை அடைய யாசித்தான். அப்படி அவனால் பிரார்த்திக்கப்பட்ட அக்கினிவித்தையையும் யாகவிதியையும் முறைப்படி உபதேசித்தான். ஒருமுறை சொன்ன மாத்திரத்திலேயே புத்திசாலியான நசிகேதஸ் யமராஜன் கூறிய பாவற்றையும் திரும்பக் கூறினான். யமராஜனும் உலகத்திற் சிறந்த புத்தியின் தேர்ச்சியைக் கண்டு, மிகுந்த சந்தோஷமுடையவனாய் அவ்வக்கினி உன் பெயரினால் விளங்குக என்று அநுக்கிரகித்தார் இப்போதும் நசிகேதஸ் என்ற பெயரினால் அவ்வக்கினி விளங்குகிறது. இவ்வாறு முதல் இரண்டு வரங்கள் வாங்கிய பின்னர், சந்தோஷமுள்ள யமராஜன் மூன்றாவது வரத்தின்பொருட்டு அன்போடு அநுமதியளித்தார்.

நசிகேதஸ் வர்ஷாகாலத்தில் கரைபுரண்டோடும் மலையருவியில் முழுகிய புற்போல, அநேகம் யோசனையினால் அழன்ற மனதைத் தடுக்க முடியாதவனாய் ஆலோசிக்கின்றான்.

உலகத்தில் சத்து, அசத்து என்ற பதார்த்தங்களை உணர்ந்த மகான்களுக்கும் கலக்கத்தை உண்டுபண்ணும் பதார்த்தங்கள் அநேகம் இருக்கின்றன. அநேக மகான்கள் மேன்மை அடைந்தும் ஸ்வல்பத்திலேயே சந்தோஷத்தை அடைகின்றார்கள். அவர்கள் ரத்னாகரத்தை அடைந்தும் சக்தியினாலேயே சந்தோஷத்தை அடைகிறார்கள். இப்பொழுது அப்படியுள்ள விஷயங்கள்தாம் பிரார்த்திக்கப்படவேண்டும். எவைகள் தேசத்தினாலேயும், காலத்தினாலேயும், முயற்சியினாலேயும் வேறு இடத்திலிருந்தும் அடைய முடியாதனவோ, அவைகளே பிரார்த்திக்கத் தக்கன. ஆனால், அவ் வஸ்து எது? என்று மனதில் சிந்திக்கும் நசிகேதஸுக்குப் பரமேச்வரனின் அனுக்கிரகத்தினால் ஓர் எண்ணம் உதித்தது. அதாவது, ஒருவரும் ஒருகாலத்தும் உயிரோடு யமபுரத்திற்குப் போவதில்லை. போனாலும் மறுபடியும் உயிரோடு பூலோகத்திற்குத் திரும்புவதும் இல்லை. இறந்தவர்களாமேல் தமது கர்மாவுக்குத் தக்க யாதனைகளை அனுபவிப்பதற்கு யமனுலகத்திற்கு வருகிறார்கள். அனுபவம் முடிந்தவுடன் கர்மாவை அனுசரித்து மற்றொரு தேகத்தை அடைந்து ஏதோ ஒரு லோகத்தில் வசிக்கிறார்கள்.

அவர்களுக்குக் கொஞ்சமும் முன் ஜன்மத்து நடத்தை யறியப் படவில்லை.

எனக்கோவெனில், பெரிய பாக்கியத்தினால் உயிருட னேயே யமலோகத்திற்கு வருகையானது ஏற்பட்டது. இது மிகவும் அரிதே. ஆகலால், சரியான காலத்தை வீணாய் விட மாட்டேன். மூன்றாவது வரத்தினால் அடைய முடியாத பர கதியையே பிரகாசம் செய்கிறேன். உலகத்தில் பரதத்து வத்தை யறிய இச்சையுள்ளவர்களாக சாதுக்களுக்குள் விவா தம் அநேகம் இருக்கின்றன என்று இப்படிப் பலவாறு எண்ண மிட்டுக்கொண்டு,

𑌯𑍇𑌯𑌂 𑌪𑍍𑌰𑍇𑌤𑍇 𑌵𑌿𑌚𑌿𑌕𑌿𑌤𑍍𑌸𑌾 𑌮𑌨𑍁𑌷𑍍𑌯𑍇
𑌅𑌸𑍍𑌤𑍀𑌤𑍍𑌯𑍇𑌕𑍇 𑌨𑌾𑌯𑌮𑌸𑍍𑌤𑍀𑌤𑍀 𑌚𑍈𑌕𑍇 ।
𑌏𑌤𑌦𑍍𑌵𑌿𑌦𑍍𑌯𑌾 𑌮𑌨𑍁𑌶𑌿𑌷𑍍𑌟𑌸𑍍𑌤𑍍𑌵𑌯𑌾𑌹𑌂
𑌵𑌰𑌾𑌣𑌾 𑌮𑍇𑌷 𑌵𑌰𑌸𑍍𑌤𑍃𑌤𑍀𑌯𑌃 ॥

பிராணிகளுக்குத் தேகம் போன பிறகு அது இருக்கிறதென் றும் இல்லையென்றும் அந்த விஷயத்தில் விவாதமானது இருக் கின்றது. இவைகளில் ஒன்றை நிச்சயம் செய்யாவிடில் மத்தி யஸ்தர்களுக்கு அதற்கு உசிதமான காரியத்தில் பிரவிருத்தியும் நிவிருத்தியும் உண்டாகாது. இதில் பிரத்தியக்ஷமாகப் பார்த்த வர்கள் சாக்ஷிகளாகக் கிடைக்கமாட்டார்கள். பெரியோர்கள் பிரேதபுரத்திற்கு அதிபதியான தங்களையே இதற்குப் பிரமாண மாகக் குறிக்கிறார்கள். ஆதலால், நான் தங்களுடைய அனுக் கிரகத்தில் உண்டான மகிமையை உடையவனாதலால் தங்களைக் கேட்க முறையுள்ளவனாய் மிகுந்த வணக்கத்தோடும் நிர்ப்பந் தத்தோடும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதன் உண்மை என்ன? என்பேரில் தயவினால் நியாயப்படி இதை உபதேசித்து, சந்தேகத்தைத் தாங்கள் போக்கவேண்டும். இதுதான் எனது மூன்றாவது வரம் என்று கூறினான். பிறகு யமராஜன் மிக்க மேன்மையான அவ் வார்த்தையைக் கேட்டு மனதில் சந்தோஷ முடையவனாய் இருந்தபோதிலும் பிரீதியடையவில்லை.

(தொடரும்.)

———

# தீபோற்சவ வினா?

இந்த வருடப் பஞ்சாங்கத்தில், விக்கிரமவூ கார்த்திகைமீ 27உ சுப்பிரமணியத்தலங்களிலும், 29உ சிவஸ்தலங்களிலும் தீபோற்சவம் நடத்துவதற்கு விவரிக்கப்பட்டிருந்தது. சுப்பிரமணியத்தலங்களுக்குக் கிருத்திகாதீபம் செய்ய நக்ஷத்திரம் பிரதானமா? அல்லது திதியா? சிவஸ்தலங்களுக்குப் பிரதானம் எது? ஒன்றுக்கொன்று மாறுபட்டுச் செய்யலாமா? சிவஸ்தலங்களில் 27உ நடத்தியிருந்தால் ஆகமசம்மதந்தானா? சிவஸ்தலங்களில் பூர்ணைத்திதிதான் முக்கியமென்றும் ரோகிணி நக்ஷத்திரம் இருந்தாலும் தோஷமில்லை என்றும் இருக்கிறது. அப்படியிருக்க, சிவஸ்தலங்களில் கிருத்திகைநக்ஷத்திரம் மட்டும் இருக்கும்போதும் திரயோதசித்திதியில் தீபோற்சவம் செய்ய ஆதாரமிருக்கிறதா? கிரமமாக 27உ செய்யவேண்டியதா? 29உ செய்யவேண்டியதா? சிவஸ்தலங்களில் 27உ நடத்தியிருப்பதற்கு ஏதாவது ஆதாரமிருக்கிறதா? இந்த விபரத்தை ஆதாரத்துடன் அறிஞர்களாகிய தாங்கள் எழுதுவீர்களென்று நம்புகிறேன்.

தங்கள் அன்புள்ள
ஶிவ. நாராயணபட்டர்,
சுப்பிரமணியசுவாமிகோவிற் பூசகர்,
பரமக்குடி,
இராமநாதபுரம் ஜில்லா.

# தீபோற்சவம்

விக்கிரமவூ கார்த்திகைமீ 27உ வியாழக்கிழமையன்று இவ்விடங்களில் உள்ள சிவாலயங்களில் ஆகமவிரோதமாகப் பௌர்ணமி அல்லாத தினத்தில் தீபோற்சவம் நடத்தியிருக்கிறார்கள்.

ரோஹிண்யாம் வா பரண்யாம் வா க்ருத்திகாம் வா விஶேஷத: ।
உத்தமம் க்ருத்திகாயுக்தம் மத்யமம் ரோஹிணீயுதம் ।
அதமம் பரணீயுக்தம் க்ஷாவி ந்ருஜமனீஷிபி: ।
பரண்யாம் வாத கார்த்திக்யாம் ஸதா வா த்ருஜமனீஷிபி: ।
தீபோத்ஸவம் ஸமாசீர்ய பவேத்யாயா ந்ருபேஶ்வர ॥

என்று காரணாகமம், குமாரதந்திரம், சகலாகமசங்கிரகம் முதலிய நூல்களிற் கூறப்பட்டிருப்ப, விக்கிரமவூல கார்த்திகைமீ 27உ பர்வம் அல்லாத தினத்தில் தீபோத்ஸவம் நடத்தியது சாஸ்திரவிரோதமாகும்.

இதைப் பிரசுரப்படுத்தி இதற்குச் சரியான ஆதாரம் எழுதக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இங்ஙனம்
எம். நடராஜக்குருக்கள்,
திருவுத்தரகோசமங்கை.
15—12—40.

குறிப்பு:—

ரோஹிண்யாம் வா பரண்யாம் வா ருக்ஷே வா ம்ருகசீர்ஷகே ।
பூர்ணிமாஸம்பந்தஸந்த்யாயாம் தீபோத்ஸவம் ஆசரேத் ॥

ரோகிணியிலாவது பரணியிலாவது மிருகசீரிடத்திலாவது பூரணை சப்பந்தித்திருக்கிற சந்தியாகாலத்தில் தீபோற்சவம் செய்க.

உத்தமம் க்ருத்திகாயுக்தம் மத்யமம் ரோஹிணீயுதம் ।
அதமம் பரணீயுக்தம் தீபம் பூர்ணிகாரயேத் ।

கிருத்திகையோடு கூடிய பூரணை உத்தமம்; ரோகிணியோடு வருதல் மத்தமம்; பரணி சம்பந்தமான பூரணை அதமம். ஆகையால் பூரணையில் தீபோற்சவம் செய்க எனக் காரணாகமத்திற் கூறப்படலானும்,

க்ருத்திகா பூர்ணியுக்தே ந யதி பூர்ணி ஸம்யுதம் ।
ரோஹிண்யாம் வா பரண்யாம் வா தீபம் பூர்ணிகாரயேத் ॥

கார்த்திகைநக்ஷத்திரத்தோடு பூரணை சம்பந்தப்படவில்லையேல், பர்வசம்பந்தமான ரோகிணியிலாவது, பரணியிலாவது தீபோற்சவத்தைச் செய்க.

அபூர்ணி க்ருததீபம் ராஜராஷ்ட்ரம் விநஶ்யதி ।

பூரணை சம்பந்தப்படாத கார்த்திகையில் தீபோற்சவம் செய்தால், அதிகாரிக்கும் தேசத்துக்கும் கெடுதியுண்டாகும் எனக் குமாரதந்திரத்திற் கூறப்படலானும்,

तस्मात्सर्वप्रयत्नेन तस्यात्सर्वयुक्ते निशामुखे।
दीपोत्सवो विना तस्य पर्वहीने कृते यदि।
राजराष्ट्राभिनाशाय तस्मात्पर्वणि कारयेत्।

ஆகையினல், தீபோத்ஸவத்துக்குப் பர்வம் பிரதானம்; பூரணை சம்பந்தமில்லாதபடி செய்தால் அதிகாரிக்கும் தேசத்திற்கும் கெடுதியுண்டாம்; ஆதலால் பர்வசம்பந்தமான நக்ஷத்திரத்திற் செய்க எனச் சைவகாலவிவேகத்தில் சுவாயம்புவாகமவிதி உதகரிக்கப்பட்டிருத்தலானும்,

द्विदिनव्यापिनं पर्वं पूर्वं त्यक्त्वा परं गृहेत्।
अस्तङ्गमनवेलायां दीपोत्सवसमाचरेत्।
पर्वदिनादेतु सन्ध्यायां पूर्वेद्युर्दीपमाचरेत्

பூரணை இரண்டு நாளிலும் பிளவுபட்டிருந்தால் முதனளை விடுத்து, மறுநாளில் அஸ்தமனகாலத்தில் செய்க, மறுநாள் சந்தியாகாலத்தில் பூரணையில்லையேல் முதல் நாளில் தீபாரோகணம் செய்க எனவும் காரணத்திற் கூறப்படலானும்,

सम्पूर्णं वा विना पर्वं नक्षत्रं युक्तयुक्तकम्।
पर्वप्राधान्यमित्युक्तं तद्धि प्रशस्तके।
सायाह्ने चालये दीपं शिवप्रीतिप्रदायकम्॥

நக்ஷத்திரம் சேர்ந்தாலும் சேராவிட்டாலும் பருவமே பிரதானம்; அது சிவனுக்குப் பிரீதியைத் தரும் எனவும் காரணாகமத்திற் கூறப்படலானும்,

கார்த்திகையோடு கூடிவரும் பூரணை உத்தமமென்பதும், ரோகிணியோடு கூடிவரும் பூரணை மத்திமம் என்பதும், பரணியோடும் மிருகசீரிடத்தோடும் கூடிவரும் பூரணை அதமம் என்பதும், பூரணை சமபந்தப்படாத நக்ஷத்திரத்தில் செய்தல் கூடாதென்பதும், தீபோற்சவம் பர்வப் பிரதானம் என்பதும் வலியுறுத்தப்பட்டமை காண்க.

அற்றேல் குமாரதந்திரத்தில்,

𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍇𑌽𑌪𑍍𑌯𑌸𑌂𑌬𑌨𑍍𑌧𑍇 𑌵𑌾 𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑌂𑌤𑍁 𑌪𑍍𑌰𑌧𑌾𑌨𑌕𑌂 ।
𑌏𑌵𑌂 𑌪𑌰𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌧𑍀𑌮𑌾𑌂𑌸𑍍𑌤𑍁 𑌕𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌦𑍀𑌪𑍋𑌤𑍍𑌸𑌵𑌂 𑌚𑌰𑍇𑌤𑍍

பூரணை சம்பந்தமிருந்தாலும் இல்லாவிட்டாலும் நக்ஷத்திரம் பிரதானம்; இப்படிப் புத்திமான் பரீக்ஷித்துக் கிருத்திகா தீபோற்சவம் செய்க என்று கூறியது முரணுமோ எனில், முன்னர்க் கூறியது சர்வாலயதீபத்துக்கும், நக்ஷத்திரப் பிரதானமெனப் பின்னர்க் கூறியது சுப்பிரமணியஆலய தீபத்துக்குமாதலால் முரணுகாமை கண்டுகொள்க. ப—ர்.

---

ஞானசாஸ்திரங்களை அறிதற்கு

## ஐவகைப் புத்திகளின் விபரம்

[சூதுமலை சிவஸ்ரீ ச. பொன்னுஸ்வாமிக்குருக்கள் அவர்கள்]

புத்திகள் (1) மிருத்துபுத்தி, (2) தாருபுத்தி, (3) சிலாபுத்தி, (4) வேணுபுத்தி, (5) தைலபுத்தி என ஐந்துவகைத்தாம். இவற்றுள்:—

1. மிருத்துபுத்தி:—மிருத் என்பது மண்; அஃதாவது: மண்சுவரில் ஒரு இரும்பாணியால் அடிப்பதும் திரும்பப் பிடுங்கி எடுப்பதும் மிக இலேசாக இருக்கும். அதுபோல, குருவிடம் கேட்டவற்றை உடனே அறிந்துகொண்டு சற்று நேரத்திற்குள் முற்றாக மறந்துவிடுதலேயாம்.

2. தாருபுத்தி:—தாரு என்பது மரம். அஃதாவது: பச்சைமரத்தில் ஒரு ஆணியைத் தைப்பது மிக இலேசு. ஆனால், பின்பு வருத்தத்தோடு அதைப் பிடுங்குவது சாத்தியமல்ல. அதனைப் போலவே குருவிடம் கேட்டவற்றை இலேசாக மனசில் பதித்துக்கொண்டு, அதை மறவாமலும் அதிகந் தெரியாமலும் இருப்பதேயாம். பட்டமரத்தில் ஆணியைத் தைப்பதும் வருத்தம். அப்படியடித்தாலும் சொற்பநாளில் கழுவி விழுந்துவிடும். அஃதேபோல் கேட்ட விஷயங்கள் மனதிற் பதிவது கஷ்டம். அப்படிப் பதிந்தாலும் கொஞ்சக் காலத்தில் மறந்துபோம்.

3. சிலாபுத்தி:—சிலா என்பது கல். அஃதாவது: ஒரு கருங்கல்லிலே நான்கு துளைகள் செய்து ஒரு துளையில் உளி வைத்தடித்தால் (மற்றைத் துளைகள் வழியாகவும் பிளந்து) கல் இரண்டாகப் பிளந்துவிடுவதுபோலச் சந்தியான இடங்களில் குறிப்பான ஒரு கருத்தைச் சொன்னால் அதைக்கொண்டு மற்ற வற்றையும் தெரிந்துகொள்வதாம்.

4. வேணுபுத்தி:—வேணு என்பது மூங்கில். அஃதாவது: மூங்கிலின் கணுவில் ஒருபக்கம் உளிவைத்தடித்தால் இரு பக்கங்களும் பிளந்துபோவதுபோல், ஒரு விஷயத்தைக் கேட்ட அப் பொருளைக் கொண்டே முன்பின் உள்ள பொருள் களையும் அறிந்துகொள்வதாம்.

5. தைலபுத்தி:—தைலம் என்பது எண்ணெய். அஃதாவது: கிணற்றுத்தண்ணீரில் ஒரு துளி எண்ணெயை விட்டால் அது தண்ணீர் முழுதும் பரவுவதுபோல், குரு சுருக்கமாக விளக்கியதைக் கொண்டே எல்லா விஷயங்களையும் தெரிந்து கொள்வதாம்.

இவற்றில் சிலை, வேணு, தைலங்களைப் போன்ற புத்தி உடையவனுக்கே ஞானசாஸ்திரங்களைப் போதிக்கவேண்டும். இந்தச் சாதனங்கள் எல்லாம் கைவந்த பின்னே சாஸ்திரங்களை ஆராயவேண்டுமென எண்ணுதல் கூடாது. அப்படி எண்ணு வது சமுத்திரத்திலுள்ள அலை அடங்கிய பிற்பாடே ஸ்நானம் செய்வோமென் றெண்ணுதல் போலாம்.

---

# நிஷ்காமியத்தவ இயல்பும் பயனும்

[கரவெட்டி: கா. கந்தப்பு ஆசிரியர் அவர்கள்]

"தவஞ்செய்தா ரென்றுந் தவலோகஞ் சார்ந்து
பவஞ்செய்து பற்றறப்பா ராக—தவஞ்செய்த
நற்சார்பில் வந்துதித்து ஞானத்தை நண்ணுவரேல்
கற்றூர்சூழ் சொல்லுமாங் கண்டு."

சரியையாதி நாற்பாதங்களையுமே, ஆசிரியர் இவ்விடத்துத் தவம் எனக் கூறினர். தவமும் நிஷ்காமியம், காமியம் என இரு பிரிவினை யுடைத்து. சிவபுண்ணியம் என்று சொல்லப்படுவதும், நிஷ்காமியத்

தவமுமாய, உண்மைச் சரியையாதி நாற்பாதங்களும் முத்தியிருங்கனியைப் பெறுவதற்காய தவங்களாகும்.

"விரும்புஞ் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோ லன்றோ பராபரமே".

என வரும் பெரியார் வாக்கும் உற்றுணர்தற்பாற்று.

"ஊனக்கண் பாச முணராப் பதியை
ஞானக்கண்ணிற் சிந்தை நாடி"

என வரும் சிவஞானபோதம் 9ம் சூத்திரப்படி "பசுபாச அறிவால்" இறைவனை அறிய முடியாதென்பதும், இறைவனின் திருவடிஞானத்தானே, உயிராகிய தன்னறிவின்கண் ஆராய்ந்தறிதல்வேண்டும் என்பதும் தெளிவாகின்றது. அவனருளால் அவன்றாள் வணங்குவதாய், இறைபணி நிற்றலினாற்றான், அஃது சித்திக்கும். படிவழி முறையானே ஏறிச் சென்றாலன்றி இலகுவில் தற்பரஞானங் கிடையாதென அறிக. சரியையாதி முப்பாதங்களையுஞ் செய்தவர்கள், பலனை அநுபவிப்பதற்குச் சாலோகாதி பதங்களை உறுதிபாகப் பொருந்தி அப் பதங்களில் உளவாகிய இன்பங்களை அநுபவிப்பர்.

அநுபவிக்கவேண்டிய காலங் கழிந்தபின் அப் பதங்களை விட்டுப் பிரிந்து, முன் பற்றவைத்த வினைப்பயன்களை அநுபவித்தற்பொருட்டுப் பூமியில் உயர்ந்த குலத்திற் பிறந்து, வினைப்பயனை அனுபவிக்கும் பொழுதே முன் செய்த சரியைகிரியையாதியைச் செய்து அவற்றால் ஆசையை அறுத்து, உண்மைஞானத்தைப் பொருந்துவர்.

"தானம்யாகம்தீர்த்தம்ஆச்சிரமம்தவங்கள்
சாந்திவிரதம்சன்மயோகங்கள்சரித்தோர்
ஈனமிலாச்சுவர்க்கம்பெற்றிமைப்பளவின்மீள்வர்."

என ஸ்ரீமத் அருணந்திசிவாச்சாரியார் திருவாய்மலர்ந்தருளியபடி, பசுபுண்ணியங்களாய காமியதவங்களைச் செய்தோரும் பாவங்களைச் செய்தோரும் சுவர்க்கநரகங்களிற் சென்று, இன்பத்தின் மிகுதியையும், துன்பத்தின் மிகுதியையும் அநுபவிப்பர். அநுபவித்த பின், நனவின்கண் கண்டவற்றைக் கனவுகாணுங் காலத்து மறந்து அறிவு வேறுபட்டாற்போல், சுவர்க்கநரகங்களுக்குச் செல்வதற்கு முன்னுள்ள உடல் கெட்டதையும், இன்னும் மற்றைய மாறுதல்களையும் மறந்து, அறிவு வேறுபட்டு, முன்னுடம்பு இறக்கும்பொழுது பக்குவப்பட்டிருக்கும் வினை காட்டும் கதியை ஆன்மா விரும்பும்படி மனஞ் செலுத்துதலால், தேவகதி முதல் நரககதி என்னும் நான்கனுள் ஒன்றிலே செல்லுவதற்கேது

வாய்ச் சுவர்க்கநரகங்களில் அநுபவித்து எஞ்சிநின்ற புண்ணியபாவ சேடத்தால், மண்ணுலகத்தில் இன்பமுந் துன்பமுங் கலந்து அநுபவிக்க வேண்டியதாதலின், மனந் தள்ளிய கதிக்கு எற்ற கருவிற் சென்று உற்பவிப்பர்.

ஆதலின், இவை காமியத்தவங்களெனவும், பிறவிப்பெரும்பிணியையே தருவன எனவும், நிஷ்காமியத் தவமாய, சரியையாதி நாற்பாதங்களே மெய்த்தவமாமெனவும் உணரற்பாற்று.

பிறப்பு இறப்பு என்னும் நீரையுடையனவாய், மதியை விழுங்குகின்ற காமம் என்னும் பாம்பு விரிந்து நிற்பனவாய், இடைவிடாது நிகழும் விடயங்கள் என்னும் இரைகளைத் தின்னுகின்ற காணக்களாய மீன்கூட்டங்கள் சுழல்வனவாய், மாறி மாறித் தோன்றுஞ் சுகதுக்கங்கள் என்னும் அலைகள் மோதுவனவாய், மனமென்னும் வஞ்சகமுள்ள மகரஞ் சுழல்வனவாய், அகம்பாவம் என்னும் ஆமைகள் இருப்பனவாய், அவா என்னும் அளவுகடந்த ஆழத்தையுடையனவாய், போகமென்னும் முதலைகள் செறிந்தனவாய், மலமென்னும் உவர்ப்பு செறிந்துளதாய், மார்க்கங்களாய பல துறைகளையுடையனவாய், தேவர்முதல் தாவரம் என்னும் பெயர்களையுடையனவாய் இருக்கும் சத்தசமுத்திரங்களில் ஒன்றையேனுங் கடக்கமாட்டாதவர்களாய் அலக்கணுறுகின்றனம்.

கடவுளின் திருவடியாகிய தெப்பத்தை யடைந்தாற்றான், இச்சாகரங்களைக் கடந்து, முத்திக்கரையை அடையலாம்.

> "சன்மார்க்கம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்
> தாதமார்க்க மென்று சங்கரனை யடையும்
> நன்மார்க்கம் நாலவைதாம் ஞான யோக
> நற்கிரியா சரியையென நவிற்றுவதுஞ் செய்வர்."

என வருஞ் சுருதிப்படி திருவடியை யடைவதற்குச் சரியை முதல் ஞானமீறாகிய நான்கும் நல்ல நெறிகளாம். இந் நான்கும் உண்மைச் சிவபுண்ணியமெனவும் உபாயச் சிவபுண்ணியமெனவும் இருதிறப்பட்டு, அவ்விருதிறத்தாலும் ஒவ்வொன்றும் நான்கு நான்காகச் சிவபுண்ணியம் எட்டுவகைப்படும். அவை ஒவ்வொன்றும் நான்கு நான்காக முப்பத்திரண்டாய் விரியும். இவற்றின் இயல்புகளையெல்லாம் விரிக்கிற் பெருகும் என்றஞ்சி விடுத்து, உண்மைச் சரியையாதி நான்கு பாதங்களின் இயல்பை மிகச் சுருக்கிக் காட்டுகின்றேன்.

சரியை

சரியையாவது: புறத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய உருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இதன் உண்மையாவது, இத் தேகத்தை மலச்சுமை எனவும், அநித்தியம் எனவும் கண்டு, உபவாசமிருத்தல் முதலியவற்றால் தேகத்தை வெறுத்தலும்;

வேடத்தானும் சிவோகம்பாவனையானும் பிரசாதயோகஞ் செய்தலானும் மெய்யடியாரையும் சிவலிங்கப்பெருமானையும் உண்மை யுணர்ந்து வழிபடுதலுமாம்.

### கிரியை

கிரியையாவது: புறத்தொழில், அகத்தொழில் என்னும் இரண்டானும் சிவபெருமானுடைய அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இதன் உண்மையாவது, பிருதுவியாதி முப்பத்தாறு தத்துவங்களையும், சோதிகளைந்து, பஞ்ச சுத்திகளையுஞ் செய்து, தன்னை உள்ளபடி அறிதலாம்.

### யோகம்

யோகமாவது: அகத்தொழில் மாத்திரையானே சிவபெருமானுடைய அருவுருவத்திருமேனியை நோக்கிச் செய்யும் வழிபாடு. இதன் உண்மையாவது, அங்ஙனந் தன்னை யறிந்தவிடத்துத் தனக்கு உயிர்க்கு உயிராய் இருந்த திருவருளைக் கண்டு, அவ்வருளே வடிவாகவிருந்து முன் நீக்கிநின்ற கருவிகளோடு கூடாதிருத்தல்.

### ஞானம்

ஞானமாவது: அறிவுத்தொழிலின் மாத்திரையானே உருவம், அருவுருவம், அருவம் என்னும் முத்திறத் திருமேனியையுங் கடந்து நின்ற தற்பரசிவத்தை நோக்கிச் செய்யும் வழிபாடாம்.

பசியை நீக்கும் உணவினால் உண்டாகிய இன்பம் நிலைத்தலின்றி மீளப் பசி உண்டாகுங்கால் கெடுதல்போல; வேள்வி முதலாகிய தவத்தால் உண்டாகிய சுவர்க்கஇன்பம் நிலைத்தலின்றி மீளப் பூமியிலோ நரகத்திலோ வருங்கால் கெடும். ஆதலின், கெடுதலில்லாத சரியையாதி தவங்களையே செய்யத் தலைப்படவேண்டுமென்பது இதுகாறுங் கூறியவற்றால் தெளிவாகும்.

''சார்ந்தாரைக் காத்தற் றலைவர் கடனுதல்'' என வருஞ் சுருதிப்படி, இறைபணி நின்று, செடிசேருடலத் தொடர்புகள் நீக்கி, மாயா காரியமாகிய இவ்வுலகமும் அநுபவிக்கும் இன்பமும் நிலையில்லாதன என உணர்ந்து, தன்செயலற்று, நிஷ்காமியதவங்களைச் செய்வோராகிய மெய்யடியார்கட்கு இறைவன் ஆகாமியவினையை இல்லாதவாறு செய்தும், பிராரத்தவினை அநுபவியாதவாறுந் திருவருள் புரிவன். திருவருள் வழி நிற்போராகிய அடியார்கள் இந்தச் சன்மத்திலேயே ஞானங் கைவரப்பெற்றுச் சீவன்முத்தராய் வினைமுடிவில் சாயுச்சியப்பேறடைவர். ஆதலின், யாம் பாசத்தினின்றும் விடுதலையடைந்து இறைவனின் பாததாமரைநிழலையடைய முயற்சிப்போமாக.

சுபமஸ்து.

---